


உ

சிவமயம்.

# குரு முறை.

## கழநி வாசல், திரு வருணசல தேசிக ரத்நப்

# பிள்ளைத் தமிழ்.

---

### விக்நேசுவர துதி.

சீர்மேவு நால்வேத முடியினுப நிடதமுஞ்
செவ்வாய்ம லர்ந்துரைக்குஞ்,
சித்தார்த்த போதமாஞ் சிற்சதா நந்தசிவ
செம்பொருளு முடலின்மேலா,
யேர்மேவு சீவனு மபேதவடி வாகலா
னேகமே வாத்துவிதமென்.
றியாவரு முணர்ந்திடற் கங்கைகொ டுணர்த்துமத
யானைமுக னைத்தொழுதுமால்,
கார்மேவு மஞ்ஞான விருள்சித்தெ முந்ததிவ
கரமணி சுகாதீதமாங்,
கைவல்ய முதவுசிங் தாமணிநல் வானவர்சி
காமணி விளங்குஞானத்,
தார்மாம றைப்புமான் சீவரத் நமணி
சதாசுகக் கண்மணியருந்,
தமர்கள்கு டாமணியெ னரியசற் குருமணித்
தமிழ்மொழித ழைக்கவென்றே.

## 1. காப்புப் பருவம்.

### விஷ்ணு ஸ்துதி.

சுகுணகிரி யாநந்த வரநதிந றுந்தமிழ்த்
தொங்கல்பர போதமதமா,
துங்கமன வாம்பரிவி தேகவள நாடுசிற்
சுகாகர ருட்கேதநங்,
குகுணநம நாதியர்க ளஞ்சுறந டாத்துசெங்
கோன்மறைமு ழக்குமுரசங்,
கோதறுத சாங்கமாக் கொண்டவரு ளுசலக்
குரிசிலைக் காத்தருள்கவே,
யகுணநெடு மாயவெங் கோடையால் வாடுமுயி
ராம்பயிர்த ழைப்பரினவோ,
டயர்வெனுந் திரையில்பரி புரணகெம் பீரமா
யாழ்பரங் கடல்குடித்துத்,
திகழ்மோட்ச லட்சுமியெ னுஞ்சோதி மின்னலொளி
செய்யவருள் வெற்பிவர்ந்து,
சிவஞாந வமிழ்தமழை கைம்மாறி லாதுபொழி
செங்கட்க ருங்கொண்டலே. (1)

### சதா சிவ ஸ்துதி.

சிவஞாந வடிவமுண் டாக்கியரு ளாஞ்சுவைத்
தெள்ளமுத மூட்டிவன்கட்,
சிவபோ தத்தைக்கு மைத்துஞா தாதியைத்
திகழாம லாவரித்தே,
யுவமாந மற்றபோ தாநந்த வெள்ளமே
யொருதாமெ னத்தெருட்டு,
மோங்குதிரு விளையாட லடியரித யாம்பரத்
துறுகடவு ளைத்துதிப்பாம்,
நவமான நறவொழுகு குமுதமென வண்கைமலர்
நாளுமுகு ளிதமாகவு,

நளிநமென வேயெளிய னகமலர வுஞ்செயிள
ஞாயிறென வேநிறைந்த,
பவமான விருள்பருகி யரியமெய்ப் பத்தியாம்
பரவையின் முகட்டுதித்துப்,
பரமசுக லீலைபுரி யருணு சலப்பெயர்கொள்
பான்மகவ ளிக்கவென்றே (2)

சிவ காமி ஸ்துதி—வேறு.

பூநத மாமறை நூபுர மோலிடு பாதபு ராதனனைப்-
பூரண னைச்சுக காரண னைச்சுக போதம தானவனைத்,
தீநத யாநிதி யாகவி ளங்கிய தெய்வசி காமணியைச்-
சீரரு ணுசல ஞாநவ ரோதய சேயினை யருள்புரிக,
மாநத முன்றநு வாகிய முப்புர மாளுற மெய்யுணர்வாம்-
வன்னிவி டுத்தொரு புன்னகை கொண்டுறை வாநவ
[னேர்புடையிற்,
பாநுவி னெண்கதிர் மானவி ருந்தருள் பாலித மேபுரியும்-
பானல்வி ழிச்சிவ காம சௌந்தர பச்சையி ளங்கிளியே. (3)

விநாயகர் ஸ்துதி—வேறு.

பெருமா மதியென வகமே வளர்தரு பிள்ளைப் பெரு
[மானைக்,
குருமா மணியெனு மருணு சலவெங் கோவைக் காவல்
[செயும்,
வருமா லுலதுயர் சிவமே யெனவலம் வந்தோர் கனிவாங்
[கும்,
திருமூ லப்பிர ணவமந் த்ரார்த்த தேஜோ மயவடிவே. (4)

சுப்பிரமணியர் ஸ்துதி—வேறு.

பனிமால் வரைமிசை யுத்பவ மாகிப் பரஞ்சோதி-
படரும் தருவைச் சூழ்தரு பைம்பூங் கொடிதந்த,
கனியா கியமுரு கன்திருப் பொன்னங் கழற்போதைக்-
கடையே முடிமிசை வைத்திரு கைகூப் புதல்செய்வாஞ்,

செகியா வழிஞா நக்குல தீபங் கனியமிர்தஞ்-
சிறியேங் குடிமுழு தாண்டருள் செய்யுங் குலதெய்வங்,
தனிநா யகமென வேயொரு தானே யருளுருவாய்த்-
தரைமேல் வருதரு ராயம தலையைப் புரந்திடவே, (5)

## விபூதி ஸ்துதி—வேறு.

சுருதி வடிவாள் கொடுவிடயச்
சூழ்கா டெறிந்து வெளியாக்கித்-
துரிய மெனுநல் விதையூன்றித்
தொல்லா ரருணன் னிர்பாய்ச்சிக்-
கருது மொருமெய்ச் சிவபோகங்
கையா டுழவ ருறைதருதென்-
கழுநி வாயற் பதிவாழுங்
கருணை லயனைக் காத்திடுமால்-
திருகு சிவப் பழமலத்தைச்
செங்கை வாங்கி மெய்ஞ்ஞானத்-
தியிற் புகட்ட வதிற்பூத்துத்
திருந்த வருந்திற் பவரோகம்-
பெரிது தணித்து மேலணியிற்
பேதக் குணுங்கு தலையோட்டிப்-
பேரா நந்த சித்திதரும்
பிறங்கு தெய்வத் திருநீறே. (6)

## உருத்திராட்ச ஸ்துதி—வேறு.

மன்னுயிர் கட்கடு மின்னலி யற்றுற வந்துழி யஞ்சு முக-மற்றவை தம்வயி னுற்றெரி யிற்செரின் மாறலி லாறுமுக, மின்னவை தத்தமு ளத்துற னல்விதி யென்னவ ருட்கடலூற்-றெய்தியி ருந்தருள் பசுபதி விழிவழி யெழுமணி யைத்தொழுவாங், தன்னிகர் மெய்த்தவர் சற்குரு நற்கழ றண்கம லம்புகுமா-தவளநி றப்பவ ளச்சர ணம்பொற் றழைவிரி சிறையன்ன, முன்னுற வுற்றிருள் வாய்புரி கண்படு முளரிம லர்ப்பொய்கை, மொய்த்திடு நற்கழ நிப்பதி தேசிக முத்தைய ளித்திடவே.. (7)

பஞ்சாக்ஷர ஸ்துதி—வேறு.

பவசலதி வரையிவர வந்தநற் பாதையைப்-
பழவடிய ரகமருவு செஞ்சுடர்ச் சோதியைத்,
துவளுமத மலையனைய வைம்புலத் தோட்டியைத்-
துரியசிவ னுரியபெய ரைந்தினைப் போற்றுதுங்,
கவலுசினை வயர்வகல மொய்த்ததற் சாட்சியைக்-
கரமணியி னுதவியெதி ருற்றகட் காட்சியை,
யவலினளி முரல்கழநி யம்பதித் தீர்த்தனை-
யருணகிரி யெனநிலவு சுந்தரற் காக்கவே. (8)

பூமகள் ஸ்துதி—வேறு.

நாதஞ் சிலம்புஞ் சலஞ்சலமு நல்விந் தெஃகப் புடையு மெனு-நளிநந் தாங்கிக் குரம்பைமுத ணுகமெ னும்பன் னகவணையிற், போதஞ் சுருங்கிச் சுகத்துறங்கும் புத்தே ளிதயப் பூந்தவிசிற்-போந்தின் னருள்வாழ் வுதவுறுநற் பூமா மகளைப் போற்றுதுமால், வேதஞ் சுரும்புக் குழு வெனச்சூழ் விமலா நந்தக் கனியருந்தி-விண்ணோர் பண்சே யிசைமுரன்று விளையாட் டயரும் பங்கயப்பூம், பாதஞ் சிரத்திற் பொறித்தருளிப் படிறேன் றனையும் வலிதாளும், பரமா நந்தச் செல்வனையே பாது காத்திங் கருள்செயவே. 9

நாமகள் ஸ்துதி—வேறு.

மூவர் மாமறைகள் சூழு தற்கரிய மோந ஞான சுவிநோதனை-மூடி ராவினிசி கோடி யென்னவரு மோக பாசவதி நாசனை, தீவ மிந்திரவி கோடி யென்னவொளிர் சிற்சு கோதயவி லாசனைச், சீர்வி லங்குமரு ணுச லப்பெரிய தேசி கேசனைய ளிக்குமால், விவி லாதவமு சோக மென்னுமருள் வெள்ளை யன்னமிசை யூர்தியாய்—மேவு மிவ்வுலக மாய ழிந்திடவி ழித்தி மைத்தல்புரி வேதனூர், நாவெ னுங்கமல பீட மேவிமறை நாலு மோதியடி யார்கள்டான்—ஞான வித்தையைய ளித்தி லங்குமெனி னுவி லுற்றகலை வாணியே. (10)

### பல தேவர் ஸ்துதி—வேறு.

இமையவர் விஞ்சையர் பைரவ ரிந்திர ரிரவிகள் சந்தி ரர்கு—ழெண்டிசை யோர்வசு வெண்மர்ம ருத்துவ ரேழ் மறை நன்முனிவ. ரமுதுற மின்மொழி யெழுமட மங் கைய ரங்கம லத்துறையு-மாதிநல் வேதிய ளுதியர் வந்திவ ணுரரு ளேபுரிவா, ரமைதரு பொன்மக ளெழிலுறு வம் புனை யங்கைதி ருந்தியபி—னம்புய னுயிரொடு வரைதரு மோவிய மன்னம லர்க்கையார். சுமைதரு கொங்கைகு லுங்கந டம்புரி சொர்னம ணிக்கோயிற்—றாயந லூரரு ளுசல தேசிக சொச்சுக ருபனையே. (11)

*காப்புப் பருவம் முற்றிற்று.*

---

## 2. செங்கீரைப் பருவம்.

பூமலிய நந்தசிற் சொலிதமட வன்னமென் பூண் முலையெ டுத்தணைத்துப்-புநதவருள் வாசநன் னிர்கொடபி டேகம் புரிந்துமெய்ஞ் ஞானாம்பரத், தூமலிபொ லன்று கில் கொடீரம்பு லர்த்தியத் துவிதவெண் காப்பணிந்து, துரியமெனு நன்னிலத் திலகமிட் டாரணச் சொர்னமணி திபதட்டா, லாமலிய நந்தகல் யாணகுண மங்கையர்க ளாலத்தி யேத்தெடுத்தங்-காறுமுப சாந்தகுண வால்வளையி னுன்முகந் தநுபவா நந்தவெள்ளத், தேமலியு மின்னமிர்த ருத்தவள ருங்குழவி செங்கீரை யாடியருளே-திமிலமறை யறிவரிய சமரசசு வாநுபவ செங்கீரை யாடியருளே. (1)

மகிமைதரு சித்தார்த்த போதமா வாக்கிய மணித் தொட்டி லிற்பிணித்த—மலர்முண்ட காதியுப நிடதமெனு மாடக வடந்தடக் கைப்பிடித்துச், சுகமொழியு பேட்சை யுப சாந்திநல் விசாரணை சுபேட்சையரு டுய்மைமுன்னுஞ்- சுந்தரப் பாவையர சைத்திடச் சுகபோத சொருபனுஞ் சிற்

சத்தியு. மகமகிழ்வு கூர்தரவி வேகனிஷ்க் காமனே டக் கனவி ரோதஙின்று—ளரவிந்த மணிமகுட முடிசூடி யஞ் சலி யொ டாசிபல கூறிநிற்பத், திகழ்வால சூரியர்கள் கோடி யென வொளிர்குரவ செங்கீரை யாடியருளே—திமிலமறை யறிவரிய சமரசசு வாநுபவ செங்கீரை யாடியருளே. (2)

குருமொழியெ னுஞ்சுடிகை முடியினு டச்சிரவ ணக் குழைகள் செவியினுடக்-குலமறைப் பொருணரவ மொழு குமட லவிழ்கடிக் குமுதவா யிதழ்களாடப்—பொருசருவ சங்கப்ப ரித்தயாக மாமணிப் பொற்றொடிக ளங்கையாடப், போதசுக முதவுசெஞ் சீறடியி னுகமப் புதுநூபு ரங்க ளாட, மருவுமிரு வினைகடிண் டாடவக டிதகடித மாயை நெஞ் சூசலாட-வண்மைசெறி யடியவர்கள் கொண்டாட வஞ்ஞகுல மகனுவி சூறையாடத், திருவளர் பொழிற் கழசி யம்பதியி லுறைகுரவ செங்கீரை யாடியருளே-திமில மறை யறிவறிய சமரசசு வாநுபவ செங்கீரை யாடி யருளே. (3)

பௌவவெண் டரளமணி மாலைநா லுந்தனப் பாவை யர்க டாளினேவும்—பணிவிடைகண் முந்தைபுரி பாக்ய மென மீக்கொடூஉப் பாவியர்க ளாமுரிரையங், கௌவு வாய் விண்டகன் கரையுமிழி னும்விடாக் கடும்பவ வளற்றி லாழுங்—கடையனையு மருவரா த்தாரருள்க ரந்தெழிற் கடை நோக்க முட்புறம்புந், தௌவலற வைத்தசும் பொழு குடலி னங்யசை தங்யவெழி லுருவமாக்கிச்—சச்சிதா நந்த சுக வெள்ளங்கு டைந்திடத் தாட்கமல முடிசூடியே, செவ் விதியினுண்டாநற் றேசிகசி காமணி செங்கீரை யாடியருளே-திவ்யகல் யாணகுண பூஷணவ லங்கார செங்கீரை யாடி யருளே. (4)

வேறு.

தாணுவி டத்தே சோரனெ முந்தாங் கஞ்சோதித்—
தாணுவி டத்தே சீவன மைந்தா னென்றேர்ந்தே,

பூணினி டத்தா ரோபம கன்றுற் பொன்னேயாம்—
போலறி வுற்று லோர்சிவ நீயே யென்றேனே,
காணுத லுற்றே வாநவ ருஞ்சூ ழெம்மானே—
கா தும த்த்தா ரோர்வினி ணங்கா மெய்ஞ்ஞாநச்,
சேணுற வுற்றே யார்பவ செங்கோ செங்கீரை—
தேசிக நற்சூ டாமணி செங்கோ செங்கீரை. (5)

வேறு.

இளவா ணகைவார் தனநீ ளறலோ தியர்மே னசை விட்டே—யிகமே பரமே வருசீ ரெகினங் காலோ தந மென்றே, யுளமூ டெழுமா சைகளற் றிகல்சே ரொருசே வியமூன்—றுளமா சகலா மதமா றினுமே யுளமா நம தற்றே, யுளதே யிலதே யுருவே யரு வே யொளியே வெளி யேயென்—றேதும் மவையா யலவா முணர்வே யொருதா மெனவுய்த்தே, தெளிவே மிகுவா ரிதயா லயனே செங்கோ செங்கீரை—திருவா ரருணு சலநா யகமே செங்கோ செங் கீரை. (6)

தநமுந் தநவும் மாமுங் குருவின் சரணந் தனில்வைத்தே—
சரணம் புரியு மதுவே மறைசொற் றுனம் பணியற்றே,
சினமுங் கனமுஞ் சுகமுந் துயருஞ் செறியும் பொழுதெல் [லாஞ்—
சிவனேந் தொழிலா மெனவுன் னுதலே செயுநற் றவநாளு,
நனவுங் கனவு மயர்வுங் கெடினு நடமற் றேர்படியாய்-
நணுகுங் கரிநா னெனுமுட் டிடமே ஞாநம் மெனவோதித்,
திநமுந் நினைவா ருறவாய் வருவோய் செங்கோ செங்கீரை-
திருவா ரருணு சலநாய கமே செங்கோ செங்கீரை. (7)

சுரநதி யதனைக் கானல்பு னற்கொடு துங்கஞ் செயுமாறுஞ்-
சுடர்விடு பரிதிக் கிருளற வோவிய சுடரெதி ரிடுமாறுஞ்,
சருவரி யிரியக் கார்நிற முகிலைச் சமர்பொர விடுமாறுந்-
தவமுதல் வழிகொண் டெனதுரு வுணரத் தளர்வுறு மமை [யத்தே,

பருவர லொழியப் பரசுக நிலைசெம் பவளத் திருவாயாற்-
பழமொழி யதுகொண் டொருநொடி யதனிற் பகல்விட
[வருள்செய்தே,
திருமறை முடியின் வளர்தரு குருபர செங்கோ செங்கீரை,
சீரரு ணசல ஞானவ ரோதய செங்கோ செங்கீரை. (8)

அடியவ ராரிய னருள்வழி யெதிர்பார்த் தமர்தலு மருள்
[பொங்கி-
யவனுரை மொழியுள் ளாமவை யேற்றங் கமைதலும்
[விதியென்றே,
குடவளை சுடர்வான் றுளிவிழு காறுங் குவிவா யங்காந்துங்-
கொழுவிய மீனங் கவர்வான் வெள்ளிய குருகுக ளசை
[வற்று,
மடலவிழ் கமலப் பொய்கையு மோடையு மன்னியு ணர்த்
[தலுறு-
மகிமைக ணிறைதேன் கழனியெ னுஞ்சீர் மாநக ருக்கரசே,
செடியருள் வடிவா ளேந்துபு யாசல செங்கோ செங்கீரை-
சீரரு ணசல ஞானவ ரோதய செங்கோ செங்கீரை. (9)

ஒருமனை யுற்றவ ருதவுவ துய்த்திடி னென்றுறு மய
[லென்றே,
யூர்கடொ றும்பலி கொண்டவ னுண்டுறு மொண்டுற
[வரைமான,
மருவுமி தழ்க்குமு தங்கமு நீரொடு வசனமு தற்கெழுமு,
மலர்தொறும் விரைமக ரந்தம ருந்துற வண்டுகள் புக்கு
[முவே,
பெருகுநா றுந்தே னுறென வோடிப் பேரரு ளிற்பாயப்,
பேரின் பெனவினை வளர்தரு கழனிப் பேரணி நகர்
[வாழ்வோ,
யருமறை யுச்சியி லாடுப தாம்புய வாடுக செங்கீரை,
யாரிய னுமெனை யாளுடை நாயக வாடுக செங்கீரை. (10)

2. *செங்கீரைப் பருவம் முற்றிற்று.*

## 3 தாலப் பருவம்

மந்தா நிலப்பைங் குழவிதவழ் மலயக் குருமா தவமு நிவன், மறியுந் தரங்கக் கடல்குடித்து மருந்தைப் பொரு வுந் தமிழ்க்கடலைத், தந்தாங் கெனது வினைக்கடலுந் தாக மோகப் பெருங்கடலுந்—தணவாப் பிறவிக் கருங்கடலுந் தண்ணு ரருட்கண் விருந்தாக்கிச், சிந்தா குலத்தைத் தவிர்க் குமின்பத் தெள்ளா ரமுதக் கடல்விரித்துத்—திராக் கவலை தீர்க்கவருஞ் சிந்தா மணியே விரைகமழுஞ், சந்தார் பொழிற்றென் கழநிநகர்த் தலைவா தாலோ தாலேலோ, தவத்தோ ரிதயப் பூந்தவிசிற் றனிநா யகமே தாலேலோ (1)

மாயத் திருக்கி லதிஷ்டாந வடிவச் சாயை களைப் பொருளா—மதித்தே யுழன்று பினரருளான் மதிக்குள் விர விச் சுகிப்பவர்போற், றாயத் திரடுண் டொருஞ்சாயை தோன்ற வதிலொன் றினையிவணந்—தோகை யன்னு ளேகொல்பணைத் துணைத்தோண் ஞெமுங்கப் புல்லுவ மென், றேயத் தழீஇப் பயன்காணு திருப்ப நகைத்துக் கரங்கொட்டி—யிளவா ணகைவந் தாடவர்மார் பிறுகப் புணர்ந்து விளையாடுஞ், சாயப் பளிக்கு மணிமாடக் கழநி நகரோய் தாலேலோ, தவத்தோ ரிதயப் பூந்தவிசிற் றனிநா யகமே தாலேலோ. (2)

வடிவே னயநங் கொடுவுயிரை வாங்கி நிரயங் குடி யேற்று—மகளிர் திறங்க ளுணர்ந்துமவர் வழிச்சென் மாக் கள் போலாது, கடிவா ரீசத் துகளருந்திக் கண்ணீர் கொடுவா யலம்பிவருங்—காலைப் படைஞெண் டெதிர் சென்று காணு விடிஞுங் கதைநின்றன், னடியார் போலுந் துறவுற்றே யம்பொற் குறுமுட் டாளலவ—னமருஞ் செந் நெற் றரளம்விளை யணியார் கழநி நகர்க்கரசே, தடமா வெனது வுளம்பூத்த சரணும் புயனே தாலேலோ—தவத் தோர் ரிதயப் பூந்தவிசிற் றனிநா யகமே தாலேலோ. (3)

சுருதி யூக மநுபவத்தாற் றுகளற்றெருருநஞ் சுயவடிவஞ்—சுடர்விட் டெறிக்குஞ் சிவமென்றே தோன்று மளவுஞ் சிறுவருக்கு, வரையும் யோகர் போற்றும்பி மதுவுண் டயருந் தென்புடைசூழ்—மயறீ ரிசைகண் முரல்வனமார் மாடந் தோறு மடியவரைக், கருதி யாகஞ் செயப்புனைந்த கவினு ரன்ன கொடித்துகில்கள்-காலிற் புடைக்கக் கற்பகப்பூங் காவிற் பிலிற்று மதுவெள்ளங், தரையுற்றெருருதே னுறெனப்பாய் தருமா நகரோய் தாலேலோ—தவத்தோ ரிதயப் பூந்தவிசிற் றனிநா யகமே தாலேலோ.(4)

தங்கண் மநக்கற் பனையுலகைத் தாமே யெனக்கண் டொழியாது-தவம்பூண் டுழலு மவர்களைநின் றமர்கணேக்கி நகைப்பதுபோற், பொங்கி யுமிழும் மதக்கைமலை புகறன் னிழற்கண் டெழிற்படிகப்-பொருப்பிற்பாயுந் தொறுமுறிந்து பொருகோட் டுதிர்நித் திலங்கொணர்ந்து, தங்க விழையிற் கோத்தணியுந் தாம மணிமாளிகைப்பந்தி-தயங்குங் குருக்கேத் திரதெய்வத் தலமாங்கழகித் திருப்பதியிற், றங்கி யொளிருந் திருவருணு சலதேசிகனே தாலேலோ-தவத்தோ ரிதயப் பூந்தவிசிற் றனிநாயகமே தாலேலோ. (5)

வேறு.

சனவன நினைவிற் பலவித வுலகங் காணுறு மந்நினைவுங்-கநகத் துறுகரு நிறமென வுயர்சிற் ககநத் துறமதனுற், கநகமு மதியும் பணியென வுலகக் காணுறு நாமென்றே—கண்டுக கப்பல னுண்ணும்வி கங்கக் கவிநெறி யினர்போலப், பனிமலை மயிலியல் கொஞ்சுறு பஞ்சவ னக்கட வுட்கிளிகள்-படர்தரு வான்வழி வந்துமி சைந்திடு பற்பல்கனித்தருசூழ், தனிகழ னுபுரி துறவர்சி காமணி தாலோ தாலேலோ—தமர்களு ளத்தெழு திரமிதி வாகர தாலோ தாலேலோ. (6)

அருமறை மொழியும வாந்திர மொழிகளனைத்துமெ டுத்தெரியா—வநுபவ முயர்மக் வாக்கிய வழிபெறு மாரியர் தஞ்சமெனு, வருபவ ருக்கருண் முறையென வேழமு மாந்திர தம்பின்னர்-வருசிறு களிறுக ளுண்பா னிலையை மறித்துமு றித்தெறியா, விரிதர வேழமொ டிக்குந்தொறு மெழிற்பணி லத்திரள்க-ளெவ்வழி யும்பர வுற்றுடு மண்டல மிதுகொலெ னும்படிசூழ், தருகல ளுபுரி துறவர்சிகாமணி தாலோ தாலேலோ, தந்மய நிந்மல சிந்மய குருபர தாலோ தாலேலோ. (7)

தம்பய னயலவ ருண்பய னிவிச் சாந்தகு ணத்தவர் பாற்-றர்க்கிகள் புக்குவு ழக்கலின்மேதிகடண்புனலோடை புகச், செம்பர நல்வடி வாகவு யிர்த்திர ளைச்செய ருட்கணரின்—றிரள்படு சினையை விழித்துறு சேலுகள் சிறுகன்றெனமுட்டக், கும்பமெ னும்படி மடிசொரி வெள்ளங் கொண்டல்வ னன்றுயிலுங்—குரைகட லெனவொளிர் கழசிப் பதியிற் கோதறு சிவஞாநச், சம்புட மெனவரு துறவர்சிகாமணி தாலோ தாலேலோ-தானவ னுகிய மோநசு கோதய தாலோ தாலேலோ (8)

இருவினை வாழைக் காடுமு றித்தெறி யிபமே தாலேலோ—
வீறில வித்தை வேழமு ரித்தரு ளேறே தாலேலோ,
பொருவரு மாயைக் கோளரி யடுசிம் புள்ளே தாலேலோ-
பொங்கிய தாபக் கனலற வருள்பொழி புயலே தாலேலோ,
கருவெனு நஞ்சமொ ழித்துறு மமுதக் கடலே தாலேலோ-
கலியதுதீரப் படிமிசை வந்தருள் கண்ணே தாலேலோ,
பரசுக முதவுங் கற்பக மெனவரு பண்பா தாலேலோ—
படிறனை யாளுங் கருணு லயகுரு பரனே தாலேலோ, (9)

வேறு

மோநமு ணர்த்துங் கையாய் தாலோ தாலேலோ—
முத்திய ளிக்குங் காலாய் தாலோ தாலேலோ,
ஞாநமு ரைக்கும் வாயாய் தாலோ தாலேலோ—
நன்கருள் பொங்கும் விழியாய் தாலோ தாலேலோ,

வாநமு டுக்குங் கலையாய் தாலோ தாலேலோ—
வண்பொடி பூத்தொளிர் மெய்யாய் தாலோ தாலேலோ,
தேனிலி னிக்குமொ ழியாய் தாலோ தாலேலோ—
சீரரு ணசல தேசிக தாலோ தாலேலோ. (10)

3. *தாலப் பருவம் முற்றிற்று.*

---

## 4. சப்பாணிப் பருவம்.

மணித்திரள்கொ ழிக்குந்தி ரைக்கடற் றூசணியு மாநிலத் தையல் பூத்த—வான்பொருள்க டோறுமுறு நாமரு பங்கடமை மாயையென வேயகற்றுக், கணப்பரிய சச்சிதா நந்தசொரு பத்தினைக் கரதலா மகல மாகக்—கண்டநுப வித்தவுப சாந்தநடை யோர்கணின் காற்கமல முறுவதேய்ப்பப், பணித்தவண் புனலைப்பி ரித்தமுத முண்டெழிற் பைஞ்சிறைய வோதி மங்கள்—பங்கயக் கோயிலுறை விழவருக் கழநியம் பதியிலெம் பிறவி நோயைத், தணிக்கவரு ஞானபண் டிதசிகா ரத்நமே சப்பாணி கொட்டியருளே—தனையறியும் வழியையொரு மொழியிலருள் பரகுரவ சப்பாணி கொட்டி யருளே. (1)

காயவன் மீகமுறு முள்ளமெனு மைந்தலைக் கட்செவிய டங்கு மாற்றங் — கருணையின் முழங்கிச்சி தாகாய வெளியெலாங் கம்மிப்ப டர்ந்து மின்னி, நேயமழை பொழியுமருண் முகிலுக்க முற்றடியர் நித்தமொரு நித்த மிடல்போ—னெடுவானெ முங்தொழுகு திங்கண்மும் மாரிபொழி நீனிறக் கொண்டல் கண்டு, சாயற்க லாபமயி லாடுபூஞ் சோலைசெறி தைவதக் கன்னி நாடென்-றரைமகண் முகத்தணி நுகற்றிலக மென்னவொளிர் தண்கழநி யம்ப தியினிற், ருயெனவெ முந்தெனையு மாண்டகரு ணநிதி சப்பாணி கொட்டியருளே- தனையறியும் வழியையொரு மொழியிலருள் பரகுரவ சப்பாணி கொட்டி யருளே. (2)

பந்தமுறு நெஞ்செனவி ருண்டவணர் வார்குழற் பாவையர்க டனையர் செல்வம்—பற்றுகைவி டுத்துவாய் மலராது சென்றருட் பார்வையுடை யான்றி ருத்தாட்,கந்த மக ரந்தவர விந்தவின் னிழற்க லந்தவ னருட் சீர்த்தியைக்- கனிவாயி னிசைபாடு நல்லடியர் போற்கருங் காகமுட் பஞ் சரத்தின், முந்துறவி ருந்திசை திருந்துகுர லொழியாது மூடிப்ப றந்தோடியே- முதிருமதி மதுரப்ப ழச்சோலை வந் தெய்தி முகினிறக் கோகி லங்கள், சந்தைவிசை பாடுதென் கழசிவா யற்கிறைவ சப்பாணி கொட்டி யருளே-தனையறி யும் வழியையொரு மொழியிலருள் பரகுரவ சப்பாணி கொட்டி யருளே. (3)

அண்டமுக டளவுகடை வெள்ளமும னுப்புரைய வார்த்தெழுது யர்க்க டலையோ—ரரைநொடியி னிற்சுவறி டக்கடைக் கண் வைத்த கந்டசிந்மய ரூபமாய்த், பண்டை யினி ருக்கவருள் குரவனரு ளினையுனிப் பார்த்துளங் களித் திடுதொறும்—பலபலென வடியர்விழி சிந்துபுன லெனமடற் பங்கயம லர்ந்துகுக்கும், வெண்டரள நற்றிரள ரன்கொ லுவி ருக்குமொரு வெள்ளியங் குன்ற முறழ—மேவியொளி ரங்கழசி வாயன்மணி முத்தமே விரைநறவு கொப்பு ளிக் குந், தண்டமிழி லங்கலணி மார்பவதி ரூபனே சப்பாணி கொட்டி யருளே—தனையறியும் வழியையொரு மொழியி லருள் பரகுரவ சப்பாணி கொட்டி யருளே. (4)

செஞ்சொலொன் ஞன்ஞமுக லொன்றுநர்கள் வெள்கிச்சி ரங்கவிழ்வு றத்தளிர்க்கைச்—சேயிழைய ரர்க்கு முழ வத்தொடுந டிக்குந் திறற்குடுமி மாட நிரைசூழ், மஞ் சுலவு துஞ்சிகடொ றும்பரசி வங்கருணை வள்ளலுரு வங் கொடிங்ஙன்—வந்துதர நோக்கரவி ருந்தருளி ருந்திருவை வாரி மழை யிற்சொ ரிதலின், சஞ்சலம் வம்பிறவி தீர்தரவி ரும்புநர்க டாழாது வம்மி னென்னச்-சைகைசெயு மாறென மணிக்கொடிக ளாடுபூந் தண்கழசி வாயலரசே, தஞ்ச மென வந்தவரை யஞ்சல்செய் மலர்க்கைகொடு சப்பாணி

கொட்டி யருளே — தத்வமசி சத்யமெனு முத்திரைகொ ளத்தவிறை சப்பாணி கொட்டி யருளே. (5)

ஆற்றுறுத வப்பலன செய்தலெஞ் ஞான்றுகொ லெனே யமற முன்ன ருண்ண-லானமணி நீர்தலை சுமந்துதரு தெங்கின தருங்கனிது டுந்து டுமெனுங், கூற்றுறவி முந்தொரு மறிஞரடு சீற்றமுட் கொண்டுவிடு மாறகன்று—கூடுறுதெ ணீரொடு விரிஞ்சனெடு மாறிருக் கோலமவை கொள்ளுந ரெலாம், வீற்றுறுச ரோருகமு மங்கைகொள் வளைப்ப டையு மேவிசிறை வாவிசூழு-மேதினிம கட்கொருசு மங்கல மெ னத்திகழ் வியன்கழசி வாயலரசே, சாற்றரிய பத்தர் முடி வைத்துறும லர்க்கைகொடு சப்பாணி கொட்டி யருளே—தத்வமசி சத்யமெனு முத்திரைகொ ளத்தவிறை சப்பாணி கொட்டி யருளே. (6)

பழமறைசொல் வாக்கியக் கிகலுநர்க டலையெனப் பார்க்குளா சினிகனிந்து-படீரெனவெ டித்தவொள் வாயெ ழும நந்தன்ப ளுழுடிம ணிக்கி ரணமோர், சுழுமுனைமு ழங்கியெழு மூலவன் றண்கலைச் சோமவட் டத்தை முட்டுங்—தோற்றங்க டுப்பமதி மண்டலம துற்றுமிளிர் தூய் கழசி வாயன் மேவிக், குழலிசையி கந்தமொழி மங்கையர்கள் கற்பைக்கு லைத்தருள் வீசன் முன்னாட்—கொண்டதுபோ லன்றிமணி யார்கலியு டுத்தபூங் கோதையின் முகா ரவிந்தத், தழைதரந லுண்பலிகொ ளங்கமல மென் கைகொடு சப்பாணி கொட்டி யருளே—தத்வமசி சத்ய மெனு முத்திரைகொ ளத்தவிறை சப்பாணி கொட்டி யருளே. (7)

வேறு.

சத்திய நற்சிவ தத்துவ மெய்ப்பொரு டங்குமூ ருப் பெயர்கள்—சர்ப்பமி ரச்சுவி டத்தினு தித்தத ரத்தினு தித்த வெனச், சித்தமு றத்தெளி வுற்றல கைப்பெரு தேரெழு நீரெனமுற்—செப்புல கத்திகழ் விற்பிர விர்த்திகள் சொப்

பாந மொப்பதெனச், சத்தமொ டுத்திக ளொத்துவி ளங்கிய தன்னநு பூதியினிற்—ருனறி வுற்றரு ளின்பசு கக்கட றன்னிறி லைத்தாடிக், குத்திர மற்றவு ளத்தெழு பேரொளி கொட்டுக சப்பாணி — குப்புக ணற்கழ ரிப்பதி தேசிக கொட்டுக சப்பாணி. (8)

திரவச யித்திய மதுரமொ டுங்கிரை திரணுரை புற்புதமார்—திவலைசு டொறுமுறு தலினவை சுவைமிகு தெண்மணி நீரெனலின், வரமலி சத்துதி தச்சுக மெய்பொருள் வயினுமி லங்கலினுன்—மருவுச ராசர முழுவது மொருதம் வடிவமெ னக்காணு, மரியத வத்தின ருளமுறு மநுபவ மறைதொறு மறைதோறு—மகமகிழ் வொடுகுறு நகைகொடு வழகிலை தழகென மெச்சுதலின், குரவம லர்க்கர வநசமு கிழ்த்திரை கொட்டுக சப்பாணி—குலவரு ஞுசல குரவர்சி காமணி கொட்டுக சப்பாணி. (9)

வேறு.

அரியய னமரர்க டொழுபவ கொட்டுக சப்பாணி—
யருமறை மலைமுடி வெழுமொளி கொட்டுக சப்பாணி,
ிரைநிரை கருவிகள் வரைபவ கொட்டுக சப்பாணி—
ிைனவயர் விடைவரு மருளிறை கொட்டுக சப்பாணி,
விரியுல கெழுநிறை பரசுக கொட்டுக சப்பாணி—
விமலம துதவுறு குருமணி கொட்டுக சப்பாணி,
தருமலி கழநிந னகரிறை கொட்டுக சப்பாணி—
தமர்களு ளெழுமரு டிநகர கொட்டுக சப்பாணி. (10)

*4. சப் பாணிப் பருவம் முற்றிற்று.*

## 5. முத்தப் பருவம்.

தவவடிவு பூண்டுலையு மநவாந ரத்தினைத் தம்வசமுறப்புரிந்து—சரியைகிரி யாயோக முந்நீர்க டந்துணர்வு தானிலங் காபுரத்தி, லவமருவு மூலவாங் காராமெ னரக்கனை யதஞ்செய்து சாந்தியென் னு-மஞ்சீதை யைக்கொண்டு மோட்சவை யோத்தியிற் கபிடேக முடிபுனைந்து, வுவமையறு சுகபோக முன்னுமாத் துமராம ரோவாதி றைஞ்சி

வாழ்த்து—முயர்முத்து ராமலிங் கேசனருள் வாய்முத்த முண்டுண்டு ளங்தேக்கியே. சிவமணமெ நாளும ணக்கு மணி வாய்மலர்ச் செங்கமல முத்தமருளே—தெய்வவரு ளுசல வருட்குரிசில் வாய்மலர்ச் செங்கமல முத்தமருளே. 1

கன்னல்வளை வார்ச்சிலையு னங்கமத வேளொடுங் காலக்கொ டுங்கூற்றமுங்—கண்டஞ்சு ருசிற்ப மாறுபடு நூற்றடங் காடெறிய வீசுபாசப், பின்னல்வலை வீசஞா துருஞாந ஞேயப்பெ ரும்பகையி னைத்துரப்பப்—பேதவா தனைமிருக வேட்டைகா ணக்குலவு பீடுடைய பூபதியெனு, முன்னலரு சீவற்க நாதிமறை யுறையுறையு மோநவடி வாள்கொடுத்த—மூலகா ரணராஜ கட்கபர மேசனுறை முத்திமா நகரமென் னுஞ், செங்நெல்விளை வார்கழநி வாயன் மணி முத்தமின் செங்கமல முத்தமருளே—தெய்வவரு ளுசல வருட்குரிசில் வாய்மலர்ச் செங்கமல முத்தமருளே. 2

விஞ்ஞாந வுழவர்க ளகத்தடம் பணையிடை விசாரணு லத்தினுழுது—மெய்க்குரவ னேவலெரு வம்பெயா வோர் மொழி விதைத்தன்பு நீர்புகட்டி, யஞ்ஞாந முற்களை களைந்துவிளை யாநந்த மானசிவ போகமதனை—யாசுதவு பதிபந்த மாவினத் தாலழிவு ருதவண நின்றளிக்குஞ், சுஞ் ஞாந வடிவசெஞ் சால்யவா டீஸ்வரித் தோகைநல ணங் கிருக்கும்—சோலைவள நாட்டிடை முளைத்தமுழு மதியமே சுடர்மழைக் கருணைமுகிலே, செஞ்ஞாந மொழிநறவ மொழுகுமிதழ் வாய்மலர்ச் செங்கமல முத்தமருளே—தெய்வவரு ளுசல வருட்குரிசில் வாய்மலர்ச் செங்கமல முத்தமருளே. (3)

வேறு.

பொழியுங் கருணைக் கரும்புயலும் போதா நந்தத் தடங்கடலும்—புரண ஞாநச் செழுங்கரும்பும் புகலுஞ் சாந்த குணமதியு, மழியுங் குரம்பைத் துரந்தபர மாங்கா

ரக்குஞ் சரக்கோடு—மறமாங் கதலிப் பெருங்காடு மருளா ரடிச்செந் தாமரையும், விழையும் படிக்கு விளைந்தநிலா வெண்ணித் திலங்கட் குயிராகி—விபுதர்களுக்கு மதிப்பரி தாய் விளங்குஞ் சுதையி னெருமாற்ற, மொழியுங் குதலைச் செங்கனிவாய் முத்தந் தருக முத்தமே—மூவர்க் கடவுண் மறைதேடு முதல்வா முத்தந் தருகவே. (4)

நத்தங் கமஞ்சூலுளைந்துதரு நளிர்வெண் டரள முத லாக—நவமா மணிகளெமக்கைய நல்கே லியாமு மவை வேண்டே, முத்தங் கொடிய பெத்தமொடு முதலு நடுவு முடிவீறு—முன்பி னுதிப்பு மரிப்புமிவை மொழிதற் கரிய பரம்பொருளே, யுத்தஞ் சுருதி யநுபவத்தா லொருதா மெனவுய்த் துணர்ந்திடுவா—னெண்மா தவர்கட் கொரு மாற்ற முதவும் வநசத் திருவாயான், முத்தம் விளையுங் கழனிவரு முத்தா முத்தந் தருகவே—மூவாக் கருணை மழைபொழியு முகிலே முத்தந் தருகவே. (5)

எதிர்முற் கால மூன்றினிலு மில்லா திருந்தே யனு ருதவு-மின்னுக் கொடிய மாயையினை யிம்மென் றுரைக்கு முனரகற்றி, மதுரித் தெழுந்த தனைத்தானே வழங்குங் கருணை முதல்வள்ளான்—மன்னு மறப்பா வையருளமா மடலூ டெதிழுப் பார்த்திருக்கு. மதிகச் சிறப்புற் றெளி ரழகா வடியேங் கண்கள் களிதூங்க— வறிவா நந்தத் திருவிளையாட் டயரு மதலாய் மவுநரச, முதிரப் பழுத்த நின்கனிவாய் முத்தந் தருக முத்தமே-மும்மைப் பொருட்கு முதன்முளைத்த முதல்வா முத்தந் தருகவே. (6)

வேறு.

அமர ரயனரி முனிவர் கனவினு மறியவ ரிதெனு மத்தமே—யகில மிசையொரு மனித வடிவுகொ டறியவ ருடரு மத்தனே, தமது வுளமழ லிழுதி னுருகுறு தமர்க ளலைவரு சிற்சுகோ--ததியி னநுதின முழுக வருள்புரி தயவு

னிறைவுறு வித்தகா, சமய வழிபடு குழியி னிழிதரு தமிய னறிவுதி ருத்தியே—தரணி மதிசுடர் வரினு மொருவுவ தருமை யெனவுள மொய்த்தவோர், மும்மல விருடெற வளவி லொளிவிடு முழுவ பணிமணி முத்தமே—மொழியு மலர்மண முறழ வுலகுறு முதல்வ பணிமணி முத்தமே (7)

வேறு.

அகவிழி புதைதர வெழுமல விருளை யடர்த்துல கத் திரளா—மளவறு விவிதவல் வினைபுரி யலகை யகற்றிம றைப்பொருளா, நகைமடன் முளரிகள் விகசித முறுவண லர்த்திபொ றித்திரளா—நணுகிய வுடுவின முயிரறி வெனு மதி நட்டமு றப்புரியா, சுகசிவ பதமுறு நெறியது தெரியது லக்கிம கத்துவமார்—சுகுணந லுதயபொ லங்குவ டதனி லுதித்தவ ருட்சுடரே, முகமலர் வுறழின தழகியு துவரிதழ் முத்தம ளித்தருளே-முதுமறை பரவிய கழுமியில் வருகிளி முததம ளித்தருளே. (8)

வேறு

மருவி ருக்கு மலர டிக்கண் மநமி ருக்குந்த வமுளார் —மருவி ரிற்குமு யிர்கு டிக்கு மருளி ருக்கும் வன்கணுய், முருக ருக்குங் குவளை நற்செங் தொடைக லக்குந் திண் புயா—முதும றைக்குட் பொருடெ ரிக்குங் கரம லர்க்கு முதல்வனே, திருக றுத்திங் கெமைய ளிக்கு மொருசொல் கற்குஞ் சிறுகிளாய்-திருவி ருக்கு நகர்க ளுக்குத் திலக மொத்திங் கிலகுமோர், தருவி ருக்குங் கழுமிமுத்தன் றருக முத்தந் தருகவே-சதும றைக்க ணுளிர்ப தத்தன் றருக முத்தந் தருகவே. (9)

வேறு.

கருணை யங்கட லெனவி ளங்கிய கடவு டந்தருண் முத்தமே—கழுமி யம்பதி தனில்வி ளைந்தருள் கன்ன றந்த ருண் முத்தமே, யருணை யங்கிரி யெனவி ளங்கிய வமல

தந்தருண் முத்தமே-யகம றும்படி விரகு தந்தரு ளண்ண றந்தருண் முத்தமே, யிருணை யும்பரி செமைவ ழங்கிய விறைவ தந்தருண் முத்தமே-யெழுப ரஞ்சுடர் ரிறைவு றும்படி யினிது தந்தருண் முத்தமே, சரண முண்டக முடிபொ றித்திட வலவ தந்தருண் முத்தமே—தமர்க ணெஞ்சிடை குடிபு குந்திடு தலைவ தந்தருண் முத்தமே.(10

5. *முத்தப் பருவ முற்றிற்று.*

---

## 6. வருகைப் பருவம்.

திங்கண்முக மண்டலங் குறுவியர்வ ரும்புறச் சிறுநகைநி லாவெறிப்பத்-தென்முகமி ருந்தரும் பொன்புரிகி டந்த நெடு செஞ்சடா டவிவிரித்துச், சங்கரிக் கிளையசிவ சங்கரி யெனும்பொலன் றண்கொடியுண் மகிழ்வு பூப்பச்-சபையி னொரு பரமரக சியமடியர் காண்புறத் தனிநடந மிடுகட வுளு, மங்கருணை பொங்குமிரு கண்களிது ளும்பவறி வாநந்த நற்பவனிகூ—மண்டமுக டுங்கிழிய தொண்டர்சிவ சிவவென்ன வாதிபுலி யூரில்வருவோய், கங்கைமுத னதி பரவு மதுநதிவி ளங்குமொரு கழநிநக ரிறைவருகவே—கருதளவி லரியசிவ பதமுதவு மொருபெயர்க் கடவுணெடு மலைவருகவே. (1)

பாசடைந றுந்துழாய்த் தாமமணி மார்பனும் பதும பீடத் திறைவனும்—பனையுறணெ டுங்கைவெண் குஞ்சரப் பிடரில்வரு பாகசா தனனுமற்றும், தேசுடைய நெஞ் சத்த போதநர்க ளும்முனது செஞ்சிற டித்தொழும்பு—செய்ததினு திர்ந்தநுண் டுகள்கொடு நினைத்தவர் சித்திவிளை யாடிநிற்ப, மாசடைய வென்றவடி யாருளம கிழ்ந்துதவு வண்மைதரு முண்பலிக்கே—வாயூறி யங்கைமல ரேந்தி மணி நீர்நிலவ ரைப்பிடையு லாவந்தவா, காசுடைய வெமதுமுத் தாபவழ லிரியவரு கருணையங் கடல்வருகவே-

கருதளவி லரியசிவ பதமுதவு மொருபெயர்க் கடவுணெடு மலைவருகவே. (2)

சதுமறைபு ராண மிதி காசமுட னாகமஞ் சாற்றுநெறி யிற்றிறம்புந்—தண்ணியர்க ளென்னினு முள்ளன்பி லாதவர்க டாமெனினு மோரு ஞானப், பதமுறவி ரும்புறு நெஞ்சினர்க ளென்னினும் பகைமைவழி யாலாயினும்—பன்னுமொரு காறனையு னப்பெறுவ ரேலவர் படுந்துயர மெய்து மிமெலாம், புதுமணிகு யின்றமுடி வேந்தர்க ளவைக்களம் புக்குடையி மூந்தமானப்—புருஷர்கர மென விரைவி லங்கங்கு வந்தருள் புரிந்துசுக முதவும் வள்ளால், கதிர்பெருகு சிவபோகம் விளையுமடி யாருளக் கழனிக நிறைவருகவே—கருதளவி லரியசிவ பதமுதவு மொரு பெயர்க் கடவுணெடு மலைவருகவே. (3)

வேறு.

முத்தே வருக சிவாநந்த முதலே வருக பெருங் கருணை—முகிலே வருக முப்பொருட்கு முன்னோன் வருக மறைமூலக், கொத்தே வருக வசையில்குணக் குன்றே வருக தெள்ளமுதக்-குழம்பே வருக வருடருமெங் கோமான் வருக முத்திவிளை, வித்தே வருக சிவஞான விளக்கே வருக சுரர் பரவும்-விமலா வருக வனைவருக்கு விபுவே வருக வரியபர, வத்தே வருக கழனிகர் வாழ்வே வருக வருகவே-மறைக டுதிக்கு மெமதிருகண் மணியே வருக வருகவே. (4)

கறங்கிற் சுழற்றும் பவக்கடலைக் கடத்த வருக புலக் காட்டைக்-களைய வருக மலப்பகையைக் கடிய வருக துகள்வழியிற், புறம்புற் றுலவும் பசுபோதம் போக்க வருக சிவஞான—போத மணிச்செஞ் சுடர்த்திபம் பொருத்த வருக பரம்பொருளைக், குறுமுட் கமலக் கரமணியிற் கூற வருக பரசிவர்—கூறற் றிருக்கு மவுநநிலை கொடுக்க வருக கொடுங்கூற்றின், மறம்பிற் படுக்குக் கழனிகர் வாழ்வே

வருக வருகவே—மறைக டுதிக்கு மெமதிருகண் மணியே வருக வருகவே. (5)

முடலை யுடலம் யாமென்ன முயங்கு கில்ல முத்திதரு-முநிவர் குழாத்தை விடுத்தொன் று முயலு கில்ல நிலைப்பரிய, நடலை யுலக மெய்யென்ன நாடு கில்ல மளப்பரிய—ஞானா நந்த சிவரூப நாமன் றென்ன நவிலுகிலம், படலைத் துளபத் தொடையணியும் பதுமக் கண்ணன் முதற்கட வுட்-பணிய கில்ல மிசைமுர லும் பசும்பொற் சிறைய மது கரஞ்சூழ், மடலை வநசத் தடங்கழநி வாழ்வே வருக வருகவே—வளருங் கருணைக் கடலமுத மதியே வருக வருகவே. (6)

ஆக்கை யினையா னெனல்விடுத லணிந்த நின்மா லியங்கழித்த—லகிலங் கானற் புனலெனவே யறித லதுவிங் பிடேக, நோக்க முதலிந் தியமலரா நுவலு மகிழ்வே கமழ் சாந்த—நுடங்கும் பிராண னறுந்தூப மொய்மை மதியே சுடர்த்திபங், தாக்கு முயிர்நை வேதநமாந் தானு யிருத்த னமஸ்காரம்—தமியே மிதய மணிக்கோயி றனிலிவ் வாரா தனைகொள்வான், வாக்கு மநமுங் கடந்தசிந்தா மணியே வருக வருகவே—வளருங் கருணைக் கடலமுத மதியே வருக வருகவே. (7)

வேறு.

வருக வெங்கட மாவியே வருக வெங்குல தீபமே—
வருக தண்ணருண் மாரியே வருக சிற்சுக வாரியே,
வருக கண்ணுக ரமுதமே வருக கேடறு செல்வமே—
வருக கற்பக தாருவே வருக சற்குண மேருவே,
வருக பாசவி நாசனே வருக ஞாநவி நோதனே—
வருக தேசிக ரத்நமே வருக வெண்மணி முத்தமே,
வருக தென்கழ நாபுரி வைகு தெய்வசி காமணி—
வருக சீரரு ணசல வள்ள லெங்குரு ராயனே. (8)

வேறு.

அகில மலகைபிவ ரிரத மெனவுணர வறையு மொரு குரிசில் வருகவே—யறியு முயிர்கள்புரி யரவ மெனவுணர வருளு மொருகடவுள் வருகவே, ககந வநசமென வரனே யறியுமொழி கழறு மொருகுரவன் வருகவே-கருது ரிரதிசய சுகந லுததிதரு கமல சரணமுநி வருகவே, யகமு மிதமு மெழு துவித மயலுமற வருளும் விழியினவன் வருகவே— யடிய ரிதயமல ரதனி னடநமிடு வமல சுகசொருபன் வருகவே, கக்ந சுரர்கள்வர முநிவர் பரவுமொரு கழநி நகரிறைவன் வருகவே —கருணை முகிலுலவு மருணை யென ரிலவு கநக கிரிவருக வருகவே. (9)

வேறு.

அநக னசல னமல னதுல னமிர்த சொருபன் வருகவே- யகில புவந முழுது நொடியி லயிலும் விழியன் வருகவே, கநக மகர குழையொ டடியர் கவிகொள் செவியன் வருகவே—கருது மெமது முடியின் மகுட கமல சரணன் வருகவே, பநக சயநன் முதல வமரர் பரவ வரியன் வருகவே-பகலு மிரவு முருகு நயநர் பணிய வெளியன் வருகவே, மநது ளுதய சுகந லமுத மதியம் வருக வருகவே—மறைகள் பரவு கழநி நகரன் வருக வருக வருகவே. (10)

6. *வருகைப் பருவம் முற்றிற்று.*

---

## 7. *அம்புலிப் பருவம்.*

செங்குமுத மலர வருவா யிவனு மன்பர்வாய்ச் செங்குமுத மலர வருவான்—றென்கமல முகிழ வருவா யிவனு மடியர்கைத் தென்கமல முகிழ வருவான், கங்குலிரு ளகல வருவா யிவனுமெம தகக் கங்குன்மல மகல

வருவான்—கரையில்கடல் பொங்க வருவா யிவனு மன் பெனுங் கரையில்கடல் பொங்க வருவா, னங்கமுறு தாபந் தணிப்பை யிவன் முத்தாப வழலைத் தணித்து விடுவா— னமிர்துருவ முடையைநீ யிவனு மறிவாநந்த வமிர்துருவ முடைய னதனு, லங்கலைக ளுடையை யெண்ணெண் கலைக்கதிப னுட னம்புலீ யாடவாவே-யருணகிரி யெனநிலவு கருணைவிரி கடலுட னம்புலீ யாடவாவே. (1)

புனலிடைப் பதிபலித மாயிடுவை யிவனுநற் புந்தியிற் பதிபலிக்கும்-புவிநிழல் பொருந்திடுவை நீயிவனு மெதிரிடும் பொருணிழலி னைப்பொருந்துங், கனமசைத றன்னிடைக் காட்டிடுவை யிவனுமுக் கரணசல நங் காட்டுறும்—கருதுதுகள் விழியினுக் கிருமையா குவை மயற் கண்ணினர்க் கிவனி ருமையாம், வநிதையர்க ளறு வருள மகிழவரு வாய்பொறிகண் மநுமிவன் மகிழ வருவான்–மருவுகுளிர் சாந்தமுளை நீயிவனு மறைமுடியின் மருவுமுப சாந்தமுடைய, னனையவத முனிகர்தி யெமது குரு ராயனுட னம்புலீ யாடவாவே–யருணைகிரி யெனநிலவு கருணைவிரி கடலுட னம்புலீ யாடவாவே. (2)

ஒருகதிரு திக்கிறெனி மட்குவா யிவனிரவி யொரு கோடி வரினு மட்கா-னுள்விருள கற்றவறி யாயந்த விருளை யிவ னேரிமைப் பினிலகற்று, மொருதிசையி லுதயமுற் றிடுவையிவ னடியவர்க ளுன்னுழியெ லாமுதிப்ப—னொரு திநம திற்புரணை நீயிவனெ நாளினு மோ துபரி புரணனுவ, னுருவது வளர்ந்துதேய்ந் திடுவையிவ னெக்கா லு மோர் படித் தெனவிருப்ப—னுனைநாடு மவர்கண்மன் மதவிகா ரப்படுவ ரொழிவரிவ னைக்கண்டபே, ரரியவொரு கடவுள்யா மெனுமகம் விடுத்திவனே டம்புலீ யாடவாவே–யருணைகிரி யெனநிலவு கருணைவிரி கடலுட னம்புலீ யாடவாவே. (3)

கமலனுத வுஞ்சநந மெய்துவைய நாதியென் கையால வற்புடைப்பன்–கவிகையென வங்கசன் கைப்

படுவை யவனிசிற் கண்ணுமெல ரித்துவிடுவன், சமனுதவு மரணமெய் திடுவையிவ னித்தியத் தாளால வற்குதிப்பன்— சஞ்சலம துற்றிடுவை நீயிவன சஞ்சலத் தன்மையுள னுயி ருப்பன், விமலவிழி யொன்றுல்வி ளங்கிடுவை நீயிவன் விளங்குஞ்சு யம்ப்ரகாசன்—மேவுவைக ளங்கநீ கனவிலு மிவன்பெயர் விளம்புவர்க ளங்கமறியா, ரமலனிவ னினை யொருபொ ருட்டாய ழைத்தலா லம்புலீ யாடவாவே— யருணைகிரி யெனநிலவு கருணைவிரி கடலுட னம்புலி யாடவாவே. (4)

இரவுபக லில்லாத பரவெளியு லாவலா மின்பசா கர மூழ்கலா—மெந்நாளு மழிவிலமிர் துருவாயி ருக்கலாமெழில் சுயஞ் சோதியுறலா, மரிகரப் பிரமாதி வாழ்வுகடு ரும் பென்ன வாநந்நா டாளலா—மகமொடுபு றத்துறுக ளங்க மறவென்றுளத் தாறும்ப சாந்தமுறலாம், சரவசர வுயிர் களுட் பூரணம தானசிவ சந்திரன் ருனுகலாந்-தாநவர்கள் வாநவர்கண் மாநவர்கள் யாவருந் தாள்பணிய விறுமாக் கலா, மருமறையி னுட்பொருள் வழங்குமுதல் வள்ளலுட னம்புலி யாடவாவே—யருணைகிரி யெனநிலவு கருணைவிரி கடலுட னம்புலீ யாடவாவே. (5)

வேறு.

புலவர்கள் புகழ்தரு நீடொளி வீசிய புரணக் கலைத ரவோ—புகல்குரு மனைமுலை தழுவக் குழைவுறு போதப் ப கைதெறவோ, சலமுறு பவசல திக்கரை காணச் சரணப் புணைதரவோ—தவமுநி வரர்முதல் யாவரு மறிவரு தற்பத நிலைதரவோ, யிலைமறை காயென வுறுமிவ னுரரு ளிஃ தென யாமறியே—மிருவினை மாயைவ லாணவ மலமில ரியாவரு மெதிர்நிற்ப, மலமுறு முனையிவன் வாவாவென் றனன்வா வம்புலி வாவே—மணியருணுசல குருபர னருகே வாவம் புலிவாவே, (6)

உனையொரு கால்கொடு குழையவ ரைத்திடு மொருவீ ரனைநல்கு-மொருமுத லவனிவ னடிமல ரதிலொழு குறு சிறு துகள்கொண்டு, தனிசிக ருலகசச ராசர முழுதுஞ் சம்மா ரம்புரிதல்-சதுமறை நவிலுதல் குருமுக மாகவி சாரித் திலைகொல்லோ,முனரினை மயிர்முடி யணிப வனும்விட முடி யா வகமதியை—மொழிபெய ரொடுமிரி தரகுறு நகைபுரி முரிமுரி வதுமுன்ன, மநமகிழ் வுறவிவ னுடன்விளை யாடிட வாவம் புலிவாவே—மணியரு ணுசல குருபர னருகே வாவம் புலிவாவே. (7)

பதியிலி யடைதரு கதியிலி யுறுகர பலியின னுடை யில்லன்—படுதரை சயநம துறுபவ னகமிலி படருலக திலுண்மை, மதியிலி சுருதிசொல் விதியிலி யெவருமதிப் பிலி யுன்மத்தன்—மகவிநெ டலகைக ளுறுநடை யுடை யவன் மருவுறு குணமில்லன், றுதியிலி யொருவர்சொ லிகழ்விலி யெனவெணி சும்முவி ருந்துவிடேல்—சுரரய னரி முதல் வழிவழி யடிமைசெய் தொண்டர்கள் கண்டிடுதி, மதிதர வலனுட னிவிளை யாடிட வாவம் புலிவாவே—மணி யரு ணுசல குருபர னருகே வாவம் புலிவாவே. (8)

வேறு.

கதிரின் மண்டல மருவி னன்குறு கலைம முந்தவை யிவனுறுங்—கழசி யம்பதி வரினி றைந்திடு கலைக ளொன் றுவை யெழிலுமா, பதியி ருஞ்சடை முடிய மர்ந்திடில் பாக மஞ்சுதல் புரிதரும்—பழைய மும்மல வரவ மும் மிவன் பதம டைந்திடி லிரிதருந், துதிபெ ருஞ்சுரர் கணம டைந்திடில் சுதைக டைந்திடு கருவியாய்த்—துவள்வை யின்றிவ னடியர் கண்ணுறின் சுகுண சந்திர னெனல்வரு, மதிக டந்திடு மிவன யந்தனன் வருக வம்புலி வருகவே— வளரு மெங்குரு பரன்வி ரும்பினன் வருக வம்புலி வருகவே. (9)

பாக வம்புலி முனிவ ரும்பர்கள் பாவலர் கின்னர ரிந்திரன்—பதும வங்கணன் கமல வங்கணன் பரசி வந்திரு புடையுறக், கனக மென்கொடி யுளமகிழ்ந்திரு கரமு மூங்கிட வொளிமிகுங்—கனசி தம்பர மதின டம்புரி கடவு ளுந்திரு முகமலர்ந். தநக சின்மய சிவரி ரஞ்சந வனுப ரஞ்சுட ரசலநா—எமல முன்பெய ரவைபு னைந்திட வதிச யம்பெறு மிவனகோ, மநம கிழ்ந்துற வருக வென்றனன் வருக வம்புலி வருகவே—வளரு மெங்குரு பரன்வி ரும்பி னன் வருக வம்புலி வருகவே. (10)

7. *அம்புலிப் பருவ முற்றிற்று.*

## 8. *சிற்றிற் பருவம்.*

ஒழியா தகக்க னெக்குநெக்கா வுருக்கிக் கசிந்திட் டசும்பூறு-வுலக ரெனினுந் தனையொருகா லுன்னின் முழு மலச் சிறைகடிந்து, வெழுவா ரிதியுங் குலவரையு மிருவான் சுடருந் தாரகையு—மிமையோ ரெவரு மரக்கர்களு மிழிந்த வரவர் வேடமென, விழியா யிரங்கொண் டவன்பதமும் விரிஞ்சன் பதமுஞ் சுடர்த்திகிரி—விளங்குந் தடக்கைப் புத் தேளின் மேலாம் பதமும் வீந்துறினு, மழியாச் சுகவீ டருள்புரியு மடிகேள் சிற்றி லழியேலே — யருணு சலசற் குருமணியே யடியேஞ் சிற்றி லழியேலே. (1)

மணிவார் சுணங்கு பூத்தமுலை வடமீன் போலு மடந் தையரு — மதவே ளழகு மனைகையர்கோன் வாழ்வுங் குமரன் போன்மகவுந். திணியார் தூண்செய் மணித்தோளார் தேவேந் திரன்றன் போகமதூஉந்-திரணீ கரமா வுண்மதித் துத் தீரவகற்றித் துறந்தவராய்ப், பணியார் கடவுண் முதற்பதங்கள் பணியா துளத்தி லிறுமாக்கும்—பரம முனி வர் குழாமுருகிப் பணியப் பணியச் சிவப்பூறு, மணியார் கமலத் திருவடியா லழியேல் சிற்றி லழியேலே—யருணு சல சற் குருமணியே யடியேஞ் சிற்றி லழியேலே. (2)

படியேழ் பிலத்திற் பாவறையும் பலவா னுடுமின் மணியெறிக்கும்—பகரு முயரேழ் மாளிகையும் பரிதி மதிச் செஞ் சுடர்விளக்கும், வடியா வுததிப் பொய்கைகளும் வடபூ தரநற் சரக்கரையும்-வானோ ரெனும்பொற் பாவை களு மருவு புவநம் பலகோடி, கடியா ரிமைப்பிற் படைத் தளித்துக் கரந்து மிருந்த படியிருக்குங் — கவினுர் சத்தித் திரள்சூழுங் கழசி நகரிற் பெருவாழ்வே, யடியே மிழைப்ப துனக்கிலக்கோ வதனுற் சிற்றில் லழியேலே—யருணு சல சற் குருமணியே யடியேஞ் சிற்றி லழியேலே. (3)

ஓது நாலு மறைதருநூ லுணர்வை ஞாந மெனக் கருதி — யுரைத்தற் கரிய சுவா நுபவ முடையார் போலும் பிறர்க்குரைக்கும், போத சூந்ய சிகாமணிகள் பொருந்தும் வீட்டைப் பொருவுமென்றும் — புகமு முலகி லுறுநாம புதையச் சிதைக்கிற் காரணமாந் தீதி லாத பொருள் விளங்கத் தெரியு மெனக்காட் டுவன்போலுஞ் — சிதைக் கின் வடுக்கண் மடவாரென் செய்வேங் கோடி நமஸ்கார, மாதி மூலப் பழம்பொருளே யடியேஞ் சிற்றி லழியேலே- யருணு சலசற் குருமணியே யடியேஞ் சிற்றி லழியேலே. (4

ஆரா வமுதே செழும்பாகே யாவித் துணையே கண் மணியே-யடியா ருளத்தி லெழுந்தூறு மருளா நந்தத் தடங் கடலே, பேரா யிரங்க ளுடையானே பெம்மான் கழசி யெம்மானே—பிறவா திறவா தொருபடித்தாய்ப் பிறங்கும் பதங்க டருவானே, வாரா வரவாய் வந்தபெரு வாழ்வே வானோர் சிகாமணியே — வளருங் கருணை முதிதைமுதன் மடவார் விழியென் மதுகரஞ்சூழ். சீரார் கமலச் சேவடி யாற் சிறியேஞ் சிற்றிற் சிதையேலே-தேஜோ மயவீ டருள் குரவா சிறியேஞ் சிற்றிற் சிதையேலே. (5)

வேண்டற் கரிய பரமபதம் விரும்பா துறினுங் கருணை யினுல் — வேண்டி வேண்டி யமுதூட்டு மெய்த்தாய் போ லும் விரைந்தருளித், தூண்டற் கரிய வருண்ஞாநச் சோதி

விளக்கந் தொழும்புசெயுந்—தொண்ட ருளமா ளிகைக்கேற் றுஞ் சொருபா நந்தச் சுடர்க்கொழுந்தே, காண்டற் கரிய தெனச்சமயங் கலுழிக் கலுழித் தலைவீங்கச் – கார்சூந் முகில் செய் மணிவண்ணக் கடவுண் மாமுங் கலைமுடியுந், தீண் டற் கரிய திருத்தாளாற் சிறியேஞ் சிற்றிற் சிதையேலே— தேஜோ மயவீ டருள்குரவா சிறியேஞ் சிற்றிற் சிதை யேலே. (6)

அன்பர் வினையு முயிர்ப்பகையு மல்லார் மலமு மவத் தைகளு— மைந்து கோசப் பிணிவலையு மடங்கா மாத்தின் விகாரமதூஉந், துன்ப முறுவெவ் வினைப்பவமுஞ் சுவர்க்க நரகத் துவட்சிகளுஞ் — சுருதி மொழியிற் சமுசயமுந் தொ லையா திருக்கும் விதிவிலக்கும், வன்பு புரியு மகங்காரன் வாழும் பெருமா யாபுரமு — மறலி முடியு மிஃதலவே வனச மலர்ச்செஞ் சீறடியாற், றெம்பி னுடன்யாம் விளை யாடுஞ் சிற்றிற் சிதையேல் சிதையேலே — தேஜோ மயவீ டருள்குரவா சிறியேஞ் சிற்றிற் சிதையேலே. (7)

கண்ணு லுயிரைக் கவரவல்ல கள்வனெனயாங் கழறு கிலங்-கருது போதம் பதைபதைக்கக் கடியு மறவ னென் கிலஞ்சூழ், தண்ணுர் புனன்முற் பூதத்திற் றட்டா னெனுஞ் சொல் சாற்றுகிலந்-தவமா முனிவர் தமையெத்துஞ் சமர்த்த னெ்னச்சொல் கிலமடியார், மண்ணு முடலந் தரத்தலையே வழங்கும் பித்த னெனப்புகலேம்—வையப் பகுப்பிங் குண ராவுன் மத்த னெனுமாற் றமதுரையேந், திண்ணு ரணுவுக் கணுவான சிறுவா சிற்றிற் சிதையேலே — தேஜோ மயவீ டருள்குரவா சிறியேஞ் சிற்றிற் சிதையேலே. (8)

வேறு.

பிறியா திருக்கு மடியா ரிழைத்த பிழைகோடி நெஞ்சி னுறாப்-பெருமா னிறைந்த வொருவீடு நல்கு பெருஞான வாரி யிருளா, ரறியாமை யொன்று குலவேர் களைந்த

வடல்வீர னின்ப சுகனு — ரருளா ளநந்த மதவேளை வென்ற வதிருப னென்று மழியான், மறைநாலு மெங் கண் மணவாள னென்று மணிவாய்ம லர்ந்து மொழியும்— வழிமாறி டாத வகையாக செம்பொன் மலைபோலும் வந்த மணியே. சிறியேமி ழைத்து விளையாடு கின்ற சிறுவீட ழித்து விடலே — திருவாய்ந் திலங்கு மருணசலேச சிறு வீட ழித்து விடலே. (9)

வேறு.

அருளே நின்பொன் னடிதொழு கோமறி வமுதே நின் பொன் னடிதொழுகோ — மசலா நின்பொன் னடிதொழு கோமொளி ரமலா நின்பொன் னடிதொழுகோம், புநிதா நின்பொன் னடிதொழு கோமற்-புதனே நின்பொன் னடி தொழுகோந், தெருளே நின்பொன் னடிதொழு கோம்பர- சிவமே நின்பொன் னடிதொழுகோந். திருவே நின்பொன் னடிதொழு கோமுயர்—செல்வா நின் பொன் னடிதொழு கோ, மருவா நின்பொன் னடிதொழுகோமெம. தடிகேள் சிற்றி லழியேலே, யருண சலநின் னடிதொழு கோமுன— தடியேஞ் சிற்றி லழியேலே. (10)

8. *சிற்றிற் பருவ முற்றிற்று.*

---

## 9. *சிறு பறைப் பருவம்.*

ஆண்பெணலி யாமுலகு தோன்றிநின் றழிதலா லாக்குந மொரு முதல்வ னுளனென் — றறியாம லிந்த்ர தநு வைப் பொருவு தநுவையு மாற்றினற லாமிளமையும். வீண்பரவு கந்தர்வ நகரமன வாழ்வையு மிகுசந்தையா முறவையு— மெய்யெனம தித்துண்டு றங்கிவா ழுளெலாம் வீணிற்க ழிக்குமுலகீர், மாண்பினொரு கோடிமுக மன்சொலினு மீள்கிலா மறலியுயி ரைக்கவருவான் — வருதல்பிழை யாம லினி யேனுமொரு சாகரத மருவியுய்ந் திடுமினென்னுச்,

சேண்பரவு மடியர்வாய்ப் பறையதறை வித்தவா சிறு பறைமு ழக்கியருளே—சிந்மயா நந்தவரு ணுசலப் பரகுரவ சிறுபரைமு ழக்கியருளே. (1)

எரியுமுழ னரியுமன் னியரும்விறன் மறலியு மேங்கித்தி கைத்துரிற்ப—யாக்கைகைப் பொருளாவி மூன்றுங்கு ருப்பிரா னிணையடியி லிரவிமுன்னுக், கரியெனவ ளித்துவரு மேவல்புரி யாவவன் கருணைப்ர வாகமூறுங்—கடாட்சமத ருலெய்து தத்வஞா நத்தலது கற்பமொரு கோடியாகச், சரியைகிரி யாயோக சாதநமு ஞற்றினுஞ் சச்சிதா நந்த சுத்த—சைதந்ய மாயிலகு வீடுபெற லரிதெனச் சாந்தகுண மெய்த்தவர்களாற், றிரிபுவந முழுதும்வாய்ப் பறைய தறை வித்தவா சிறுபறைமு ழக்கி யருளே — சிந்மயா நந்த வரு ணுசலப் பரகுரவ சிறுபறைமு ழக்கியருளே. (2)

முத்தொழிற னக்குரிய வாநவர்க் கும்மாதி மூலமே மௌந ஞாந-மூர்த்திவடி வாகிவட வாலடியி லெங்கைசிந் முத்திரையி னுலுணர்த்தும், வத்துவினை நல்காது நல்கிடப் பெற்றுவாய் மௌநமுற நிலைநின்றிடு மாதவர்க ளலதிரண் டொன்டென்று தர்க்கமிடு வாய்வாத நோயரெல்லா, மெத் தனைவி வேகசம் பந்நரவ ராயினு மின்பசா கரமூழ்கிடா— ரில்லாத மாயைதரு சநநவா ரிக்கரையி வர்ந்திடா ரென்று மிதுவே. சித்தமென வடியர்வாய்ப் பறையதறை வித்தவா சிறுபறைமு ழக்கி யருளே—சிந்மயா நந்தவரு ணுசலப் பரகுரவ சிறுபறைமு ழக்கியருளே. (3)

ஐவகையெ னும்பூத மைந்துபுல னிந்திரிய மைந்தொடைந் துட்க ரணநான் — கானவிவை யாவுமொரு பொருளல்ல வென்றுமு னகற்றிப்ர காச வடிவாய்ச், செய்வகையி லாததா யாவையுஞ் செய்வதாய்ச் சிற்சதா நந்த சிவமாய்த்,

திகழ்பரம் பொருளினை யுணர்ந்தஃது தானெனுந் திட்பமுற் றவை யாவையுங், கைவலநி ரஞ்சந நிராமய வியோமவ்வி காரமாந் தானென்னவே — கண்டுபர மாநந்த வெள்ளங்கு டைந்திடுதல் கஞ்ஞாந மார்க்க மென்னுத், தெய்வவடி யார்கள்வாய்ப் பறையதறை வித்தவா சிறுபறைமு ழக்கி யருளே—சிந்மயா நந்தவரு ணுசலப் பரகுரவ சிறுபறைமு ழக்கியருளே. (4)

கலைபலவு ணர்ந்துகமழ் குங்குமமெ டுத்துலவு கரமு றழ நின்றிடேன்மின் — கன்மமெனு மளறுநிறை படுகுழி யின் முக்கடக் களிறெனவி ழுந்திடேன்மின், புலையுடலம் யாமெனம தித்திடேன் மின்வரும் போகமெம தென்றி டேன்மின் - பொருளல்ல வற்றினைப் பொருளாம தித்துப்பு லம்பித்தி ரிந்திடேன்மின், விலைமுலைம டந்தையர்க ளால ரவின் வாயுற்ற மென்றவளை யாயி டேன்மின் — விரைவில் குரு வைச்சரண மடைமினடை மின்னெனு மேலுலகர் செவிபுதைப்பத், திலைநகரி லடியர்வாய்ப் பறையதறை வித் தவா சிறுபறைமு ழக்கியருளே—சிந்மயா நந்தவரு ணுச சலப் பரகுரவ சிறுபறைமு ழக்கியருளே (5)

அகிலமுமு துங்கனவு கானனிர் கந்தர்வ வணிநகர மிந்த்ரசால—மற்றெனவு மமலசிவ சொருபமே யாமெனவு மநுபூதி யிற்பெற்றனம், பகலிரவு மறிவொடறி யாமையும் விகாரமும் பற்றறப் பெற்று நின்றேம்-பார்முழுது மடை வுற விரும்புபரி பூரணப் பரமபதம் யாமாயினேஞ், சுக முறுக ணைசைவெகுளி யிருவினைகண் முன்வருந் தொந்தவே ரைக்களைந்தேஞ்—சுருதியையெ டுத்தெறிந் தேம்யாது மஞ் சுறேந் துய்யகுரு வருளாலெனுச், செகமுழுது மடியர் வாய்ப் பறையதறை வித்தவா சிறுபறைமு ழக்கியருளே— சிந்மயா நந்தவரு ணுசலப் பரகுரவ சிறுபறைமு ழக்கி யருளே. (6)

வேறு.

எழுமர கதவிய றுரகம தணிதரு மிரதமி சைப்பொலியு-
மிரவிக ளளவில மானவெ முந்தக விருளத னைப்பருகி,
யொழிவற வமுதுகு கலைநிறை மதியமதோரா யிரமென்ன-
வுதயம துற்றறி வாநந் தந்தனை யோவா தகனுதவி, யழகுறு
புவனச ராசர முழுதும கண்டா காரமதா — யமர்தரு சிவ
சொரு பந்திகழ் வுறவணி யருணிறை மலர்விழியான்,
மொழிவரு மொழிதனை மொழிதரு குரவமு ழக்குக சிறு
பறையே — முனிவர்க டொழுமரு ணுசல மகிபமு ழக்குக
சிறுபறையே. (7

மானவ ரவதா ருகம கற்புணர் வுற்றன ளெனுமாற்ற-
மலடுறு மெழின்மட வரலினை யென்செயு மழையின
மவைகூடிப், பானுவை யென்செயு மலைபல கூடிப் பர
வையை யென்செய்யும் — பகலிர வகல்வுறு வானினை யாதி
கள் பண்ணுறு மாதலினுன், ஞாநதி வாகரன் மோநசு கோ
தய னுடைச தாநந்த—னுனென வதிதிட மாயெது மாயையி
னண்ணிடி னும்முள்ளக், கூனற ரில்லென வோர்மொழி
யருள்பவ கொட்டுக சிறுபறையே — குலமறை பரவரு
ணுசல குருபர கொட்டுக சிறுபறையே. (8)

வேறு.

இரவியொடு மயக்காந்த விருஞ்சிலையும் போல—
வியற்றுதலு மேவுதலு மில்லாம லிருப்பத்,
தரவுலகுங் கருந்தாதுஞ் சலித்திடுதல் போலச்—
சச்சிதா நந்தசிவ தந்மயமா நின்முன்.
கருவியெனுங் கரணமவை கம்பிக்கு மந்தக்—
கன்மனக் கில்லையொரு காலதினு மென்றே,
யருள்புரியு மொருகுரவ வறைகசிறு பறையே—
யருணகிரிப் பெருமானே யறைகசிறு பறையே. (9)

துன்னுமுருப் பெயர்மாயை சுட்டறிவு சீவன்—
றுலக்குவித்தல் பரிசமாத் தோற்றுவித்தல் வித்தைப்,
பன்னுமித மகிதமெனப் பண்ணுவித்தல் கன்மம்—
பகருமிந்த வைம்பொருளும் பரஞ்சுடரா யெறிக்குந்,
தன்னினைவி லுண்டாகிச் சமித்திடுமிங் கந்தனுற்—
சர்வபரி பூரணமாந் தற்பரநீ யென்றே,
யன்னையென வருள்குரவ வறைகசிறு பறையே—
யருணகிரிப் பெருமானே யறைகசிறு பறையே. (10)

9. சிறு பறைப் பருவ முற்றிற்று.

---

## 10. சிறு தேர்ப் பருவம்.

மகரதுவ சங்கலைய சந்த்ரவட் டக்கவிகை வாரிமுரசங் குயிலெனும் — வாய்விருத லிருள்யானை தென்றலிர தங்கன் னல் வார்சிலைம லர்க்கைவாளி, முகமிலகு வீசையில் பதாதி சுக வாம்பரி முதற்கொடுவ லாரிதிண்டோள், முரகரிபு ராரிமுதல் வானவரை வெற்றிகொளு மூரிமத வேளைநெஞ் சிற், பகரமுறு பொருள்களிற் பைம்மறிக் கின்றவொரு பார்வையயி லிற்குமைத்துப், பரிபூர ஞானந்த விரதங்க டாவி பர ஞானசெஞ் சுடரெறிக்குந், திகிரிதிரி புவநமுழு துஞ் செலவு ருட்டுவோய் சிறுதேரு ருட்டியருளே — சேணிற்கு மாரருணை மாணிக்க மேருவே சிறுதேரு ருட்டியருளே. (1)

உண்மையறி வானந்த மெய்ப்பொருள தொன்றெனி லுலகமே தென்றுவரிலோ—வோதுபுரி யரவமென நின்றி லகு மாயினது ணர்ந்தபின் னுரகமிலையா, லெண்மைதரு முலகவண மேகாதி ருப்பதெனை யென்றிடிற் கழுதாழிநீ— ரிலையெனவு ணர்ந்துமது தோன்றல்போ லுவகமு மிலங்க லுறு மவணமன்றித். தன்மையுறு முலகநா நாவிதம தாயேக சத்தில்வர லெலை யென்றிடிற் — றமணியத் திடை வந்த கற்பிதா பரணந் தயங்கல்போ லிலகுமென்னுத், திண்

மையா வுணர்தியென வருள்புரியு மொருகுரவ சிறுதேரு ருட்டியருளே, சேணிற்கு மாரருணே மாணிக்க மேருவே சிறுதேரு ருட்டியருளே. (2)

ஒருவனுற் பொன்பணிய தாமுணர்வு மேவனு லுல காய்வி ரிந்ததென்னி—லுயர்விணிற் பீலியும் வெயிற்குஞ் ச மும்போல வொக்குமவை பலவாயினு, முருவமொன் ருகுமிது பலவுருவ மாவதெனே யோவெனிற் கந்தருவமா —வொண்ணகர மானுமதில் விவகார மொன்றுமிலே யுறுவதிதி லெனேயென்றிடின், மருவிவரு கனவுபோற் காண்டியது நனவினது வாசனைக ளங்கமற்ற — வத்துவிற் கேதெனில கண்டசுக போதத்தில் வந்தநினே வாகுமென்னுத், திருகறவு ளத்துணர்தி யெனவெனக் கருள்குரவ சிறுதேரு ருட்டியருளே—சேணிற்கு மாரருணே மாணிக்க மேருவே சிறுதேரு ருட்டியருளே. (3)

ஆதிநடு முடிவிலாப் பொருளிளிடை நினேவுமுண் டாங் கொலோ வெனிலதற்கோ — ராநந்த லீலேயிதை மித்தை யென வுன்னும லமைதியொடு கேட்டியுள்ளஞ், சாதமுற் றணுவளவ சைந்திடிற் பரமொடுயிர் சகமதுண் டாகுமுள் ளஞ் — சற்றேனு மசையாவி டத்தின்முப் பொருளுஞ் ச மித்துமெய்ப் பொருளாகுமா, லிதெனவு முன்னினைவை யூகமா நோக்குழியி லெதிரிட்ட நாமவுருவா—யிலகுமரை யொடியினிற் கோடிநினே வாதலா லிந்தவுல குருநாமமாய்த், திதிலா திலகுமிஃ துணர்தியென வருள்குரவ சிறுதேரு ருட்டியருளே—சேணிற்கு மாரருணே மாணிக்க மேருவே சிறுதேரு ருட்டியருளே. (4)

தன்னிலெழு நினேவைத்து ணித்தால்வி ளங்குறுஞ் சச்சிதா நந்தமதனுற் — சங்கற்ப மேயுலக முலகேசங் கற்ப மாச் சாற்றலா நினேவையன்றி, முன்னுலக மொன்றிலேச் சாத்தனுறை கோவிலின் முன்னர்சது ரங்கமாக—மொய்த் திடுப தாதிகஜ துரகமிர தமமென மொழிந்தவையி னும

வுருவ, மன்னியமு றப்புரியின் முக்கா லு மண்ணதே யாகு மற் றவைகளெல்லா — மசத்தியம தாகுமாங் குலகிலுறு நாமம தகற்றிடல கண்டமாகுஞ், சிந்மயம தேயிலகு மென்றெனக் கருள்குரவ சிறுதேரு ருட்டியருளே— சேணிற்கு மாரருணை மாணிக்க மேருவே சிறுதேரு ருட்டி யருளே. (5)

ஆர்கலியி னுரைதிவலை குமிழிதிரை யாதியுண் டாயி னும வற்றினும—மானவுரு வம்பொய்மை குளிரிளக லிரத மய மானபூம் புனன்மெய்மைபோற், கார்கலிசி றைந்தவுல கத்திலுரு நாமங்கள் கபடமா யாகாரியங்-கருதரிய சச்சிதா நந்தமய மாசிருவி காரசிவ மேமெய்மையா, மேர்கெழுமி சிலைமறையின் முடியிலுப சிடதங்க ளியாவுமொரு முகம தாய்ச்சின் — றெக்காலு மோதுவதெ னக்கருதி யுள்ளத்தி லெழுகின்ற வையமெல்லாந், தீர்கெனவ ருட்கண்ப ணித் தருளு மெய்க்குரவ சிறுதேரு ருட்டியருளே — சேணிற்கு மாரருணை மாணிக்க மேருவே சிறுதேரு ருட்டியருளே. (6)

தவரும தவாய்மைமறை நான்கிற்சி றந்ததாஞ் சாம மறை யந்தமறையில் — சாந்தோக்ய வுபநிடத மோதுமா வாக்கியந் தத்வமசி யாகுமதனைத், தவராஜ ரேத்துசற் குர வனு லோர்ந்துமுத் தநுவாதி வாச்சியத்தைத் — தள்ளுதலி ரேசகம கண்டபரி பூரணச் சச்சிதா நந்தசிவமா, மவிரோத லக்ஷியப் பொருள்கோடல் பூரகம தாகுமெக் காலு மதுவா — யமைவுறுதல் கும்பகம தாகுமிது செய்தியே லமிர்தமய மாவையென்றிச், சிவராஜ யோகமெற் கருள் புரியு மொருகுரவ சிறுதேரு ருட்டியருளே — சேணிற்கு மாரருணை மாணிக்க மேருவே சிறுதேரு ருட்டியருளே.(7)

கற்பமுங் கணமுமா யவையிறென் றல்லவாங் கால தத் துவமென்னவும் — கடவானு மடவானு மாகியவை யல்லவாங் ககநதத் துவமென்னவு, மற்பொலிவி ளக்குதீ வட்டியா யல்லவாம் வன்னிதத் துவமென்னவு-மறிதிரைக் கடலாகித் தடமாகி யல்லவாம் வண்புனற் றத்வமெனவு,

மற்பவுயி ராகிமஹா தீசனு யல்லவா யவிரோத மாயிலங்கு — மத்துவித வத்துவாய்த் தத்துவசொ ரூபமா யாநந்த போத மயமாஞ், சிற்பரம தாகுமெனே யென்றனக் கருள்குரவ சிறுதேரு ருட்டியருளே — சேணிற்கு மாரருணே மாணிக்க மேருவே சிறுதேரு ருட்டியருளே. (8)

வடகைலே யோங்கலிற் றென்முகமி ருத்தலான் மத னேப்பொ டித்தவிழியோன்—மாசற்ற தக்ஷிணு மூர்த்தியாந் தென்பொதிகை வதிதலிற் கும்பமுநியு, மிடமருவு தக்ஷிணு மூர்த்தியா மிருவரு மியம்புத க்ஷிணமகற்றி — யெழில்வேத வுத்ரகாண் டம்மருவ லுறுகின்ற வெல்லேயில வர்க்கெ திர்ந்து, திடஞாந மருள்செயுஞ் சிவசுப்ர மண்யமே தெக்ஷிணு மூர்த்தியாமச்—சிவசுப்ர மண்யமென் பேருக்கி லக்கியச் செம்பொருள தாயிருக்கச், செடமருவு மடமை யேற் கருள்புரியு மொருகுரவ சிறுதேரு ருட்டியருளே— சேணிற்கு மாரருணே மாணிக்க மேருவே சிறுதேரு ருட்டி யருளே. (9)

தண்ணருட் கடன்மடையி தென்விழியி னுற்புசித சத்வப்ர தாநமநதாற்—சதுமறைக ளோலிடும் பாததா மரையினுற் றைவரும லர்க்கையினு, லெண்ணரிய கை வல்ய வுபதேசித நூலினு லேகசிவ யோகமதனு—லின்னமுத வாக்கினுன் மும்மலச் சிறையகல வென்கருத் தைத்திருத் திக், கண்ணகனி லத்தொருக் காலுமழ் யாமையாற் காது நன வாதியாவுங்—காண்கையான் மிகுபிரிய விடயமா யுறு தலாற் கநகச்சி தாநந்தமாந், திண்ணகம் ப்ர ம் மா ஸ் மி யென்னவெனே யாள்குரவ சி று தே ரு ருட்டியருளே— சிவசுப்ர மண்யனென் றேசிகசி ரோமணீ சிறுதேரு ருட்டி யருளே. (10)

*சிறு தேர்ப் பருவ முற்றிற்று.*

*கழரி வாசல் திரு வருணுசல தேசிக ரத்நப் பிள்ளைத் தமிழ் முற்றிற்று.*

ஆகக் கவி 101.

---

ராம நாத புரம் ஜில்லா திருப் பூ வணம்,

ஆசிகாநந்த ஞானாசார்ய ஸ்வாமிகள், வெளியிட்டன.

| | | ரூ.ந.பை |
|---|---|---|
| 1 | வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா வசநம் | 2—50 |
| 2 | விசார சாகரம் ஹிந்தி மொழி பெயர்ப்பு | 2—25 |
| 3 | கதா சரித் சாகரம் வசநம் கதை | 2—25 |
| 4 | வியாச தாத்பரிய நிர்ணயம் வசநம் | 0—50 |
| 5 | வேதாந்த சித்தாந்த முக்தாவலி வசநம் | 0—50 |
| 6 | நைஷ்க் கர்மய சித்தி வசநம் | 0—50 |
| 7 | வேதாந்த பரிபாஷை வசநம் | 0—44 |
| 8 | ஸ்வராஜ்ய சித்தி வசநம் | 0—50 |
| 9 | மண்டல பிராஹ்மண உபநிஷத் | 0—25 |
| 10 | ஈசாவாஸ்ய உபநிஷத், சங்கர பாஷ்யம் | 0—25 |
| 11 | ஹரிமீடே - ஹரிதத்வ முக்தாவலி | 0—75 |
| 12 | மார்கழித் திங்கள் பாராயண மஞ்சரி | 0—50 |
| 13 | பகவத் கீதை 15வது அத்யாயம், மூர்க்க சதகம் | 0—50 |
| 14 | மந்திர உபதேசம் வசநம் | 0—25 |
| 15 | திருக் களர் வீர சேகர சரிதம் வசநம் | 1—00 |
| 16 | நாநா ஜீவ வாதக் கட்டளை உரை | 2—00 |
| 17 | கீதா சாரத் தாலாட்டு வசு சந்திரிகை உரை | 2—00 |
| 18 | மேற்படி நக்ஷத்திர விளக்க உரை | 0—25 |
| 19 | மகா ராஜத் துறவு, மநப் பிரசாதிநி உரை | 2—00 |
| 20 | பக்தி (வைராக்ய) சதக பத உரை பொழிப்புரை | 1—50 |
| 21 | வைராக்ய தீபம்-பத உரை பொழிப் புரை | 0—50 |
| 22 | சிடாசாரம், பால போதிநி உரை | 0—50 |
| 23 | வேதாந்த சாஸ்திரத் ரத்நாவலி 9 சேர்ந்தது | 3—00 |
| 24 | கீதாத் திரயம் கவி (ஈசுவர கீதை பகவத் கீதை பிரஹ்ம கீதை 3 சேர்ந்தது) | 3—00 |
| 25 | வேதாந்த சாஸ்திர ரத்நத் திரயம் (விவேக சூடாமணி அஞ்ஞ வதைப் பரணி பஞ்சதசி மூன்று சேர்ந்தது) | 3—20 |